கோவிலூர்

# ஸ்ரீலஸ்ரீ துறவு ஆண்டவர்

என வழங்கும்

## ஸ்ரீலஸ்ரீ அருணாசல ஞான தேசிக ஸ்வாமிகள்

# சரித்திரமும், பிள்ளைத் தமிழும்





கோவிலூர் வாயில் — முன்தோற்றம்

தொகுப்பாசிரியர் :

கவிஞர் அரு. சோமசுந்தரன், M.A., B.T.,

கோவிலூர்

# ஸ்ரீலஸ்ரீ துறவு ஆண்டவர்

என வழங்கும்

ஸ்ரீலஸ்ரீ அருணாசல ஞான தேசிக ஸ்வாமிகள்

# சரித்திரமும், பிள்ளைத் தமிழும்





தொகுப்பாசிரியர் :

கவிஞர் அரு. சோமசுந்தரன் M.A., B.T.,

24-1

உ
சிவமயம்

ஸ்ரீ கோவிலூர் மடாதிபதி, இரண்டாவது பட்டம்
ஸ்ரீலஸ்ரீ துறவு ஆண்டவர் என வழங்கும்
ஸ்ரீலஸ்ரீ அருணாசல ஞான தேசிக ஸ்வாமி அவர்கள்

# சரித்திரமும், பிள்ளைத் தமிழும்




தொகுப்பாசிரியர்:
**கவிஞர் அரு. சோமசுந்தரன், M.A., B.T.,**
முதல்வர்; செட்டிநாடு தனிப்பயிற்சிக் கல்லூரி,
C. T. C. காரைக்குடி

வெளியீடு:
கோவிலூர் ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஞான தேசிக
ஸ்வாமிகளவர்களின் அனுமதியின்படி ஸ்ரீலஸ்ரீ
துறவுஆண்டவர் அவர்கள் பிறந்த குடும்பத்தின் வழிவந்த
தேவகோட்டை
**பிச. அரு. அரு. செந்தில்நாதன் செட்டியாரால்**
ஸ்ரீலஸ்ரீ துறவுஆண்டவர் அவர்களின்
**120 ஆவது ஆண்டு குருபூஜையின்போது
வெளியிடப்பெற்றது.
(15—8—1969)**

உ-1

# முன்னுரை

இற்றைக்கு ஏறத்தாழ இருநூறு ஆண்டுகட்கு முன் ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஆண்டவர் என்னும் பெரியாரால் ஸ்ரீகோவிலூர் ஆதீனம் தோற்றுவிக்கப் பெற்றது. அவ்வாதீனத்தின் இரண்டாவது மடாதிபதியாகி எல்லையற்ற பணிபுரிந்த, பட்டினத்தடிகளை நிகர்த்த, துறவாண்டவர் என வழங்கும் ஸ்ரீலஸ்ரீ அருணசல ஞான தேசிக ஸ்வாமிகள் அவர்களின் வரலாற்றையும், அன்னாரின் மீது திரு. சுப்பராய சுவாமிகளால் பாடப் பெற்றுள்ள பிள்ளைத் தமிழையும் தொகுத்து அளிக்கும் பணியை தேவகோட்டை உயர்திரு பிச. அரு. அரு. செந்தில்நாதன் செட்டியார் அவர்கள் என்னிடம் உவந்தளித்தார்கள். அன்னார் ஸ்ரீலஸ்ரீ துறவாண்டவர் அவர்கள் பிறந்த குடும்ப வழிவந்த செம்மலாவார்.

வேதாந்த மடங்களில் மிகவும் சீரும் சிறப்பும் பெற்றது ஸ்ரீ கோவிலூர் மடமாகும். அதன் வரலாற்றை நானும் அறிந்து நாட்டுக்கும் அறிவிக்கும் நல்ல வாய்ப்பைத் தந்த பெருமகனர் அவர்கட்கும், இறைபருளுக்கும் நன்றி செலுத்தக் கடமைப் பட்டுள்ளேன். கிடைத்த ஆதாரங்களைத் திரட்டித் தொகுத்து எளிய தமிழில் தந்துள்ளேன், அன்பர்கள் பயின்று இறையருளுக்குப் பாத்திரமாவதே அடியனேன் விருப்பமாகும்.

என் கடன் பணி செய்து கிடப்பதே.

முதல்வர்; C. T. C.<br>காரைக்குடி.<br>1-8-69

அன்புசால்,<br>அரு. சோமசுந்தரன்.

## ஸ்ரீலஸ்ரீ துறவு ஞானி

(இயற்றியவர்; கவிஞர் அரு. சோமசுந்தரன், M. A , B. T..
முதல்வர்: C. T. C. காரைக்குடி.)

வேதாந்த மடங்களிலே சிறந்த தாகி
விளங்குகின்ற கோவிலூர் ஆதீ னத்தின்
பாதார விந்தத்தைப் பணிந்த தாலே
பரம் பொருளின் அருள்பெற்ற பரம ஞானி!
நாதாந்தப் பொருளெல்லாம் தானே ஆகி
நடராசப் பெருமானின் சேயே ஆகிக்
காதாரக் கலைஞானம் பரப்பி வந்த
கதிரவனே ஸ்ரீலஸ்ரீ துறவு ஞானி!

அருள்பெற்ற தேவிநகர்க் குழந்தை ஆகி
ஆன்மீகக் கோவிலூர் அடிமை யாகி
இருள்உற்ற புவனத்தின் இரவி யாகி
இதயத்தால் பட்டினத்துத் துறவி ஆகி
மருள்உற்ற மாந்தர்க்கு மருந்து மாகி
மாணவர்க்குக் கற்பிக்கும் ஆசான் ஆகி
அருள்பெற்ற பாதையினை அமைத்த வள்ளல்
அருணாசல தேசிகராம் அடிகள் போற்றி!



கோவிலூர் மடாதிபதி ஸ்ரீலஸ்ரீ துறவாண்டவர்
என வழங்கும்
ஸ்ரீலஸ்ரீ அருணாசல ஞான தேசிக ஸ்வாமிகள்
(இரண்டாவது பட்டம்)

120 ஆவது ஆண்டு குரு பூஜை 15-8-'69

உ

சிவமயம்

கோவிலூர் மடாதிபதி, இரண்டாவது பட்டம்
ஸ்ரீலஸ்ரீ துறவு ஆண்டவர் என வழங்கும்
**ஸ்ரீலஸ்ரீ அருணாசல ஞானதேசிக ஸ்வாமிகள் சரித்திரம்.**

**வாழ்த்து.**

நாவலர் போற்றும் சமிநிழல் அமரும்
நாயகன் நளினநன் மலரை
மாளழில் ஆறு முகன்தனைக் கொற்ற
வாள்இறை திருநெல்லை அம்மை
ஆவனல் அன்பு மிகுந்துவந்து அடைந்தோர்க்கு
அருளொடு ஞானமும் அளித்துக்
கோவிலூ ரினில்வாழ் அருணா சலநற்
குருபரன் தாள்தினம் பணிவாம்.

**செட்டிநாட்டின் தலைநகர் கோவிலூர்:** செட்டிநாட்டின் நாயகமாய்ப் பல்லாண்டுகட்கு முன்பு திகழ்ந்தது ஸ்ரீ கோவிலூர் என்னும் தலமாகும். தொண்ணூற்ருறு ஊர் நகரத்தார்களும் ஒருங்குகூடி முக்கிய முடிவெடுத்த இடம் கோவிலூரே ஆகும். செட்டி நாட்டின் தலைநகராகவும், அருள் நகராகவும் திகழும் பேறுபெற்றது ஸ்ரீ கோவிலூர். அதற்குச் சமிவனம், சாலிவாடி, ஸ்ரீவல்லபம் என்னும் பல பெயர்கள் உண்டு. சைவ வழக்கில் கோயில் என்பது சிதம்பரத்தைக் குறிக்கும். கோவிலூர் என்பது செட்டி நாட்டுத் தலைநகரைக் குறிக்கும். அது காரைக்குடிக்கு அருகில் மேற்குத் திக்கில் ஒரு மைல் தொலைவில் உள்ளது. இன்றும் நீர்வளமும், நிலவளமும், அருள்வளமும் பொழில் வளமும் பொலிந்து திகழ்கிறது. அதன் தல வரலாறு கற்று இன்புறத் தக்கதாகும்.

**கோவிலூர்த் தலவரலாறு:** கோயிலூர்ப் புராணம் என்னும் நூலில் இருந்து கோவிலூர்த் தலவரலாறு அறியப் படுகிறது. காளையார் கோவிலில் வீரபாண்டியன் என்று

மன்னன் ஒருவன் பன்னெடுங்காலத்துக்கு முன்பு அரசாண்டு வந்தான். அவன் மாபெரும் சிவபக்தன். மார்பில் உருத்திராக்க மாலையும், நெற்றியில் நீறும் விளங்கக் காளீசுவரருக்குத் திருப்பணி செய்து வந்தான். காளையார் கோவிலில் வீற்றிருக்கும் காளீசுவரர் அருளால் அவன் ஒரு வீரவாளைப் பெற்றான். அந்த வாளால் அவன் பகைவர்கள் அனைவரையும் வென்றதால் அதற்கு **இராசகட்கம்** என்று பெயர் வந்தது. அந்த வாளை அவன் எவ்விடம் சென்றாலும் எடுத்துச்செல்லத் தவறுவதில்லை. ஒருநாள் அவன் வேட்டையாடப் புறப்பட்டு மான் ஒன்றைத் துரத்திச் சென்றான். அம் மான் அவனை நெடுந் தூரம் வஞ்சித்து இழுத்துச்சென்றது. மன்னனின் ஏவலர்கள் பின்தங்கிவிட்டனர். மானைத் துரத்திச்சென்ற மன்னன் கோவிலூரை அடைந்தான். அப்பொழுது அவன் மிகவும் களைத்திருந்ததால் அங்கு இருந்த **மதுபுட்கரணி** என்னும் ஊருணியில் நீராடி, நித்திய கருமம் முடித்து, காய்கனி கிழங்கை உண்டு, ஒரு மர நிழலில் பட்டாடையை விரித்து, அருகில் தன் வீரவாளை வைத்துவிட்டு உறங்க லானான். அப்பொழுது சிவபெருமான் வீரபாண்டியனின் சிவபக்தியைச் சோதிக்க விரும்பினார். எனவே அவ்வனத்தில் அந்தணன் ஒருவன் ஒரு புலியால் பற்றப்பட்டு வருந் துவதுபோன்ற ஒரு தோற்றத்தை அரசனுக்குக் காட்டினார். உடனே எழுந்து வீரவாளைத் தேடிக் காணாததால் அஞ்சாது அரசன் புலிமுன் சென்று அந்தணனை விடுவிக்கும்படி வேண்டினான். அதற்குப் புலி தான் மிகவும் பசித்திருப்பதால் அந்தணனை விடுவிக்க முடியாது என்றது. அதற்கு அரசன் தன்னைத் தின்று அந்தணனை விடுவிக்கும்படி வற்புறுத்தினான். அதற்குப் புலி, "நாட்டைக் காக்கும் மன்னவனைக் கொல்ல முடியாது" என்றது. மன்னன் அதை ஏற்காமல் புலியின் வாயில் தன் தலையைக் கொடுத்தான். உடனே புலியும் அந்தணனும் மறையத் தேவர்கள் பூமாரி பொழிந்தனர். அதற்குள் அரசனின் ஏவலர்கள் வந்து சேர்ந்தனர்.

அரசனின் ஆணைப்படி ஏவலர்கள் அவ்வனத்தை ஆராய்ந்தனர். அங்கே ஒரு வன்னி மர நிழலில் ஒரு லிங்கமும், அதன் அருகில் அரசனின் வீரவாளும் இருக்கக் கண்டனர். உடனே அரசன் லிங்கத்தைப் பணிந்து பாடி மகிழ்ந்தான். அன்று முதல் கோவிலூருக்குச் **சமிவனம்** என்னும் பெயரும், இறைவனுக்கு **இராச கட்க பரமேசுவரர்** என்னும் பெயரும் ஏற்பட்டன. அரசன் காட்டைத் திருத்திச் சிவலாயத்தைப் புதுப்பித்தான். தினப்பூசைகள், திருவிழாக்கள் முதலியன நடக்க ஆவன செய்தான். தானும் அங்கேயே தங்கி இறைவழிபாட்டில் ஈடுபட்டான். அப்படியிருக்கும் காலத்தில் ஒருநாள் அகத்திய முனிவர் அங்கு வந்தார். அவரிடம் மன்னன் சில விளக்கங்கள் கேட்டான். "மாமுனிவ! இங்குள்ள இறைவனுக்குத் **திரிபுவனேசுவரர்** என்னும் பெயரும், இறைவிக்குத் **திரிபுவனேசுவரி, சாலிவாடீசுவரி** என்னும் பெயர்களும், ஊருணிக்கு **மதுபுஷ்கரணி, பாபவிமோசனம்** என்னும் பெயர்களும், இந்தத் தலத்துக்குச் **சாலிவாடி** என்னும் பெயரும் வரக் காரணம் யாது?" என்றான். அதற்கு அகத்தியர் கூறிய வரலாறு வருமாறு.

பன்னெடுங் காலத்துக்கு முன்பு **மதுப்பிரியர்** என்னும் முனிவர் ஒருவர் சமிவனத்தில் இறைவனை நேரில் காண வேண்டும் என்னும் எண்ணத்தால் மாபெரும் தவம் செய்தார். அவரது தவமகிமையால் பிரமதேவர் அவர் முன்பு தோன்றிப் பஞ்சாட்சர மகாமந்திரத்தையும், பிரம வித்தையையும் உபதேசித்தார். முனிவரின் தவம் தொடர்ந்து நடந்தது. இறைவன் அவரது தவமகிமை கண்டு மகிழ்ந்து அவர் முன் காட்சியளித்தான். முனிவரின் விருப்பப்படி அங்குள்ள குளத்துக்கு **மதுபுஷ்கரணி** என்னும் பெயரும், நதிக்கு **மதுநதி** என்னும் பெயரும், இறைவனுக்குத் திரிபுவனேசுவரர் என்னும் பெயரும், அம்பாளுக்கு திரிபுவனேஸ்வரி என்னும் பெயரும் வழங்க இறைவன் அருள் புரிந்தான்.

சுவேதன் என்னும் மன்னன் அன்னதானம் செய்யாப் பாவம் நீங்கக் கோவிலூரில் குடியேறிக் காடு வெட்டிக் கழனியாக்கினன். சாலி என்னும் நெல் விளையும்படி வாடி என்னும் வயல்களை உண்டாக்கினன். எனவே அவ்வூருக்குச் சாலிவாடி என்னும் பெயர் தோன்றிற்று.

அங்கு சிவகுப்தன் என்னும் வணிகன் ஒருவன் தன் மனைவி சுதர்மை என்பாளுடன் இனிது வாழ்ந்து வந்தான். அவர்களுக்கு இரத்தினவல்லி என்று ஒரு புதல்வி இருந்தாள். அவள் வழக்கம் போல் சாலி நெல் காக்க வயலுக்குச் சென்ருள். உச்சிப் பொழுதில் அவள் காவல் இடத்தை விட்டுத் தன் தோழியருடன் விளையாடச் சென்ருள். அச்சமயம் தாய் சுதர்மை தன் கன்னிகைக்குத் தயிர்ச் சோறும் ஊறுகாயும் கொண்டு வந்தாள். கன்னிகையைக் காணுமல் தாய் கலங்குவாளே என்று அறிந்த இறைவி இரத்தினவல்லியின் உருவம் தாங்கி, வயல் காத்துக் கொண்டிருந்தாள். தாய் அவளுக்கு அன்னம் ஊட்டிச் சென்ருள். அவள் சென்றதும் இறைவி மறைந்தாள். சற்று நேரத்தில் கன்னிகை தன் தாயிடம் திரும்பிப் பசிதீர்க்க உணவு கேட்டாள். தாய் வியந்து தயிர்ச் சோறு அளித்ததை நினைவுபடுத்தினுள். மகள் மறுத்தாள். அப்படியானுல் தயிர்ச்சோறுண்டது இறைவியாக இருக்கும் என்று அறிந்து கோயிலுக்குச் சென்று இறைவியை வணங்கினர். அங்கே தயிர்ச் சோற்றின் மணம் வீசியது. இறைவியின் அருள் கண்டு அனைவரும் மகிழ்ந்தனர். சாலி வாடியைக் காத்தமையால் இறைவிக்குச் சாலிவாடீசுவரி என்னும் பெயர் ஏற்பட்டது.

மதுரையில் சூரதன்மா என்னும் மன்னன் ஒருவன் ஆண்டு வந்தான். அவன் மனைவி பெயர் சுகுணை. அவன் சிவமதம் நீங்கிச் சமணமதம் தழுவி இறந்தான். மறுபிறப்பில் அவன் சாகலபுரத்தில் இளவரசனுகப் பிறந்து பெருநோயால் வருந்தினுன். சுகுணை அகளங்கபுரத்தில் இளவரசியாகப் பிறந்தாள். அவளுக்குச் சுயவரம் நிகழ்ந்தது.

வேடிக்கை பார்க்க வந்த நோயாளியான இளவரசன் ஒரு புறத்தில் மறைந்து நின்றான். முன் பிறப்பில் அவன் தன் கணவன் என்பதை நெஞ்சால் உணர்ந்த இளவரசி அவனுக்கு மாலையிட்டாள். உலகமே அவனைப் பார்த்துச் சிரித்தது. எனினும் அவள் அஞ்சாமல் அவனையே மணந்து திருத்தலப் பயணம் தொடங்கிக் கோவிலூர் வந்தாள். அங்கே மது புட்கரணியில் அவர்கள் நீராடிய பொழுது இளவரசனுக்கு நோய் நீங்கிற்று.

தமிழ்நாட்டை **வீரசேன** பாண்டியன் என்று மன்னன் ஒருவன் ஆண்டு வந்தான். அவன் ஒருநாள் **கண்ணுவ** முனிவரின் ஆசிரமத்து மானைக் கொன்றுவிட்டான். அதனால் சினமுற்ற முனிவர் அவனை ஒரு வேடனாகச் சபித்து விட்டார், மன்னன் தன்னை மறந்து வேடனாகித் திரிந்தான். அமைச்சர்கள் இளவரசனுக்கு முடிசூட்டினர். வேட்டை யாடி வந்த வீரசேனன் கோவிலூருக்கு வந்தபொழுது **மதுபுஷ்கரணியில்** இருந்த மீன்கள் அவன்மீது கருணை கொண்டு தம் வாலால் நீர்த்திவலைகளை அவன் மீது வாரி இறைத்தன. அந்நீர் பட்டதால் தன் நினைவு பெற்ற மன்னன் அக்குளத்தில் நீராடினான். உடனே அவனுக்குச் **சாப விமோசனம்** ஏற்பட்டது. அவன் மீண்டும் மன்னன் ஆனான். எனவே அக்குளத்துக்குச் **சாபவிமோசன தீர்த்தம்** என்னும் பெயர் ஏற்பட்டது.

**கோவிலூர் மடத்தின் வரலாறு:** கோவிலூர் மடமானது இன்றைக்குச் சுமார் இருநூறு ஆண்டுகட்கு முன்பு ஸ்ரீலஸ்ரீ **முத்து இராமலிங்க ஞானதேசிகர் (ஆண்டவர்)** என்னும் சிவபக்தரால் தோற்றுவிக்கப் பெற்றதாகும். அவர் காரைக்குடியில் மெய்யப்ப செட்டியார் — வள்ளியம்மை ஆச்சி என்னும் பெருமக்கட்கு மகவாய்ப் பிறந்து இளமை யிலேயே சிவபக்தியில் ஈடுபட்டார். கந்தப்ப ஸ்வாமிகள் என்னும் பெரியாரால் அருள் ஒளி பெற்றார். பிறகு சிக்கலுக்கு அருகிலுள்ள பொருள் வைத்த சேரிக்குச்சென்று **ஸ்ரீ கந்தகுருசுவாமிகள்** என்பாரின் மாணவராகி அருள்

பெற்றார். அப்பொழுது அவருக்கு வயது 13. தம் குருவிடம் ஞானவாசிட்டம் முதலிய சமய நூல்கள் அனைத்தும் கற்று முடித்தார். அப்பொழுது அவருக்கு வயது 16. பிறகு அவர் கோவிலூர் அடைந்து மடத்தை நிறுவினர். மாணவர் பலருக்கு ஞானசிரியராக விளங்கினர்.

"மடமுண்டோ சிவாலயங்கள் மிகுதியுண்டோ
வாசிட்டம்படிப்பதுண்டோ மனத்துள் ஞானத்
திடமுண்டோர் நால்வர் தமிழ் படிப்பாருண்டோ
திவ்வியமாம் உதாரம் முதற் குணங்க ளுண்டோ?
விடமுண்டோன் அடியர்குழாம் மிகுதியுண்டோ?
மெய்யறஞ்சத் திரம்விரைப் பூங் காவுமுண்டோ?
வடகைலைக் கிறைவனெனும் முத்துராம
வள்ளல்திருக் கழனிநகர் வாராமுன்னம்"

என்ற சேந்தினி பழநியப்ப அய்யாவின் பாடல் முத்துராமலிங்க ஆண்டவரின் பெருமையை உணர்த்தும். அவரிடம் தேவகோட்டை **ஸ்ரீ அருணாசல ஸ்வாமிகளும், கண்டனூர் ஸ்ரீஅருணாசல** ஸ்வாமிகளும் மாணவர்களாய்ச் சேர்ந்து சாஸ்திர நூல்களைக் கற்று வந்தனர். பின்னர் இவர்கள் முறையே பெரிய **துறவாண்டவர், சின்னத்துறவாண்டவர்** என்ற புகழுரை பெற்றனர். பல்விதப் பணிகளைச் செய்த பின் ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஆண்டவர் கி. பி. 1847 இல் சிவபதவி பெற்றார். அன்னார் மறையுமுன் ஸ்ரீலஸ்ரீ அருணாசல ஸ்வாமிகளைப் பட்ட மேற்க ஆணையிட்டார். அதன்படி கோவிலூர் மடத்தின் இரண்டாம் தலைவராகப் பட்டம் ஏற்றார் ஸ்ரீலஸ்ரீ அருணாசல ஸ்வாமிகள். இனி அவரது வரலாற்றைப் பார்ப்போம்,

**ஸ்ரீலஸ்ரீ அருணாசல ஞான தேசிக ஸ்வாமிகள் என வழங்கும் ஸ்ரீலஸ்ரீ துறவாண்டவர் வரலாறு**

**தோற்றமும் துறவும்:** செட்டி நாட்டில் திருவும் அருளும் நிறைந்த நகர் தேவகோட்டை ஆகும், அங்கு நகரத்தார்

குலத்தில், இலுப்பைக்குடிக் கோத்திரத்தில் வினைதீர்த்தான் செட்டியாருக்கும் முத்தாத்தாளுக்கும் புதல்வராய் சுமார் கி.பி 1815 இல் யுவ ஆண்டு பிறந்தார் ஸ்ரீலஸ்ரீ அருணசல ஞான தேசிக ஸ்வாமிகள் இளமையிலேயே அவருக்குச் சிவபக்தியில் ஈடுபாடும், துறவில் நாட்டமும் இருந்தன செல்வக் குடும்பத்தில் பிறந்தும் அருட்செல்வத்திலேயே அவரது கருத்துச் சென்றது. இருப்பினும் அவரது பெற்றோர் அவரை வணிகத்தில் ஈடுபடுத்தினர். திருநெல்வேலிக்கு அவர் ஒருமுறை வணிக நிமித்தமாய்ச் சென்றிருந்தார். அப்பொழுது அங்கிருந்த கண்டனூர் அருணசலம் என்பவருடன் நட்புக்கொண்டார். இருவரும் சிவபக்தியிலும்சேர்ந்து திளைத்தனர்.எனவே இருவரும்திட்டமிட்டுக் கோவிலூரை அடைந்து, ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஆண்டவரைச் சரணடைந்து மாணவர் ஆயினர். அப்பொழுதுஸ்ரீலஸ்ரீ துறவாண்டவருக்குவயது 19.அன்றுமுதல் இருவரும் வீடு வாசலை மறந்தனர். பெற்றோரைத் துறந்தனர். ஆசிரியர் அருளால் அவரிடம் பஞ்சதசி, கைவல்யம், முதலிய வேதாந்த சாத்திரங்களைக் கற்றுத் தெளிந்தனர். திருப்பாதிரிப்புலியூர் முத்துச் சரவண சுவாமிகளிடம் 32000 வாசிட்டம் கற்றனர். மிக்க விரக்தியினல் **பரணிப்பிரபந்தம்** என்னும் நூலும் பாடம் கேட்க விரும்பினர். அந்நூல் அவர்கட்கு எங்குமே கிடைக்கவில்லை.

பரணிப்பிரபந்தம் எங்கே கிடைக்கும் என்ற விசாரணையில் அவர்கள் ஈடுபட்டனர். அப்பொழுது குன்றக்குடி ஆதீனத்தின் முப்பத்தைந்தாவது பட்டத்து மடாதிபதியாக இருந்த ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக தேசிகரிடம் அந்நூலின் பிரதி ஒன்று இருப்பதாக அறிந்து அவரிடம் சென்றனர். அவரை வணங்கி நூற்பிரதி வேண்டினர். அதற்கு அவர் "பரணி படித்துத் துறவுகொள்ளப் போகிறீர்களோ" என்று வேடிக்கையாகக் கூறிப் புன்முறுவல் பூத்தார். பிறகு அந்நூலைக் கொடுத்து ஆசி கூறி அனுப்பினர், இருவரும் பதில் பேசாது கோவிலூருக்குச் சென்றனர். ஸ்ரீ முத்து

ராமலிங்க ஆண்டவரிடம் அதனைக் கொடுத்துப் பாடம் கேட்டு முடித்தனர். விரைவில் துறவு பூண அவர்தம் உள்ளங்கள் துடித்தன. அதற்கேற்ற வாய்ப்பை அவர்கள் எதிர்பார்த்து இருந்தனர்.

ஒருநாள் அவர்கள் தம் குருவிடம் பாடம் கேட்டு இரவு உணவு உண்டபின், அவரது திருவடிகளை வருடிய வாறு இருந்த நல்ல சமயத்தில் "துறவு பூணஅனுமதி" கேட்டனர். அவரும் அதற்கு இசைந்து அனுமதி வழங் கினார். அவர்கள் அவ் வாணையைத் தலைமேற் கொண்டு வணங்கிக் கொற்ற வாளீசர் ஆலயத்தினை அடைந்து வழி, பட்டனர். தம் துறவு முற்றுப் பெற்று நன்கு விளங்க இறைவனையும் இறைவியையும் வேண்டினர். பிறகு நெடுங்குடி என்னும் ஊரில் ஆதிகுருதட்சணாமூர்த்தி சந்நிதியில் துறவு மேற்கொண்டு சிதம்பரம் சென்றனர்.

**சிதம்பர வாழ்க்கை:** சின்னத் துறவாண்டவர் (கண்டனூர் அருணாசல சுவாமிகள்) வடக்கு கோபுரத்தில் தனியே மனன தியானத்தில் ஈடுபட்டார். நமது பெரிய துறவாண்டவர் (தேவகோட்டை ஸ்ரீலஸ்ரீ அருணாசல ஞான தேசிக சுவாமி கள்) அடியார்கட்கு உபதேசிக்கும் காலம் தவிர மற்ற நேரத்தில் கேணி மடத்து ஒடுக்கத்தினுள் தியானம் செய்ய லானார். ஆலய வழிபாட்டின் போது இருவரும் சந்திப்பர். ஆண்டுதோறும் கோவிலூரில் நடைபெறும் குருபூஜை, திருநெல்லை அம்மை திருவிழா ஆகியவற்றுக்கு வந்து திரும்புவர். நடராசப் பெருமானிடம் அளவிலா அன்பு பூண்டு பக்தி வழியில் ஒழுகினர். பிச்சை ஏற்று உண்டு வாழ்ந்தனர்.

ஒருநாள் சுவாமிகள் இருவரும் ஒரு வீட்டிற்குச் சென்று பிச்சை கேட்டனர். அங்கிருந்த மாதர் கணிகையர் குலத்தைச் சேர்ந்தவர்கள். அவர்கள் ஸ்வாமிகளின் உடல் நலத்தில் மயங்கி வீட்டினுள் வந்து பிச்சை பெறுமாறு கூறினர். சுவாமிகள் இருவரும் வீட்டின் முற்றத்திற்குச்

சென்றதும் அக்கணிகையர் கதவைத் தாழிட்டுச் சுவாமிகளைத் தீயநெறிக்கு அழைத்தனர். அவர்கள் உடனே மவுனமாகி பத்மாசனமிட்டுத் தியானத்தில் அமர்ந்தனர். வேறு வழியறியாத கணிகையர் உடனே கதவைத் திறந்து சுவாமிகளை வெளியே அனுப்பினர். அன்று முதல் வீட்டினுள் சென்று பிச்சை பெறுவதில்லை என்று சுவாமிகள் இருவரும் உறுதி பூண்டனர்.

ஸ்வாமிகள் பிச்சை பெறும் முறையே தனி. வீட்டின் முன் சென்று கைதட்டி உணவு கேட்பர். குறிப்பிட்ட சிறிது நேரத்தில் உணவு கிடைக்காவிட்டால் உடனே அவர்கள் அடுத்த வீட்டுக்குச் சென்று விடுவர். அவர்கள் வழக்கமாக ஒரு வீட்டில் பிச்சை பெற்று வந்தனர். அந்த வீட்டு மாதரசி நற்பண்புகள் நிறைந்தவள். துறவியரை உபசரிப்பதில் காலம் தாழ்த்தாதவள். அன்று சுவாமிகள் வந்த பொழுது சோறு வெந்து கொண்டிருந்தது. சுவாமிகள் வந்ததும் கைதட்டினர். காத்திருந்தனர். வெந்தசோற்றைச் சூட்டோடு அந்த அம்மை எடுத்து வந்து துறவாண்டவர் கையில் இட்டாள். அது கொதித்தது. எனவே துறவாண்டவர் அதனை வீட்டுச் சுவரில் அறைந்தார், அது சுவரில் கூழாக ஒட்டிச் சூடு தணிந்தது. உடனே சுவாமிகள் அதனை வழித்து உண்டார். சூட்டோடு பிச்சை இட்டதற்காக அம்மையார், சுவாமிகளிடம் மன்னிப்புக் கேட்டார், அதற்குச் சுவாமிகள், "தாயே! உன் மீது யாதொரு குறையும் இல்லை. எம்மைக் காலம் தாழ்த்த நினையாமல் நீ பிச்சையிட்டாய். அதில் தவறு ஒன்றும் இல்லை." என்று கூறி அம்மையை வாழ்த்திச் சென்றனர்.

தம்மைச் சரணடைந்த நித்தியானந்த சுவாமிகள். வளவனூர் சண்முக சுவாமிகள், திருநெல்வேலி சுப்பிரமணிய சுவாமிகள், மதுரை சுப்பராய சுவாமிகள், முதலிய துறவிகளுக்கும், பாகனேரி முத்துக் கருப்பையா, மதுரை மெய்யப்பையா முதலிய இல்லறத்தாருக்கும் நாடோறும் தர்க்கயுக்தி, அனுமானங்களோடு துறவாண்டவர் அவர்கள் சத்சாத்திரங்களைக்கற்பித்து வந்தனர்.

சுவாமிகளின் தம்பி கருணாநிதி கோவிலூரை விட்டுத் திருப்பெருந்துறை சென்று வதிந்த காலத்தில் அன்னாரைக் கோவிலூருக்குத் திரும்பச் செய்யவும், ஆண்டவருக்கு முள்போல் சேவையில் ஈடுபடுத்தவும் வேண்டி "சீடாசாரம்" என்ற நூலைத் தொகுத்து "சிதம்பரத்திடம் இதைக் கொடுந்து வா" என்று சீடர் ஒருவரை சுவாமிகள் அனுப்பினா அதன் பயனாய்க் கருணா நிதி அவர்கள் கோவிலூர் திரும்பி ஆண்டவருக்குப் பணிவிடை செய்யலானார்.

**சுவேதாரண்யத்தில் :** ஒரு முறை ஸ்வாமிகள் இருவரும் சுவேதாரண்யம் எனப்படும் திருவெண்காட்டுக்குச் சென்று ஆலயத்தில் திருவெண்காடரை வழிபட்டு சந்நிதியில் நின்றனர். ஆதி சைவரிடம் விபூதி பெற்றுப் பிறகு வீதியில் பிச்சைக்குச் சென்றனர். அது அகாலமானதால் பிச்சை கிடைக்கவில்லை. எனவே இருவரும் பசியோடு ஆலயத்துள் நுழைந்து, அர்த்தசாம தரிசனம் செய்து, முக்குளத்தில் இரண்டு கை நீர் அருந்தி, சிவபெருமானைச் சிந்தித்த வாறு குடவரையில் உறங்கினர். அச்சமயம் சிவபெருமான் அவர்கள் மீது கருணை கொண்டு, ஆதி சைவரின் வடிவத்தில் அவர்கள் முன் தோன்றி இருவர் கையிலும் சர்க்கரை அன்னமிட்டார். அவர்கள் அதனை மகிழ்ச்சியோடு உண்டு, கைகழுவி உறங்கினர். மறுநாள் அவர்கள் இறைவனை வணங்கச் சந்நிதிக்குச் சென்றபொழுது விபூதி வழங்கிய ஆதி சைவர் அவர்களிடம், "இரவில் எங்கு உணவுண்டீர்கள்?" என்று வினவினர். அதற்கு அவர்கள் வியந்து "நீங்கள் தானே சர்க்கரை அன்னம் இட்டீர்கள்." என்றனர். உடனே ஆதி சைவர் தான் உணவளிக்கவில்லை என்றார். மூவரும் அது இறைவனின் திருவிளையாடல் என்றெண்ணி மகிழ்ந்தனர்.

**திருவண்ணாமலை, திருப்பதி:** ஸ்வாமிகள் இருவரும் ஒரு முறை திருவண்ணாமலைக்குச் சென்று அங்குள்ள வனத்தில் வசிக்க வேண்டும் என்னும் கருத்தால் அம்மலையை நோக்கிச் சென்றனர். அப்பொழுது மேட்டுச் சாவடியில் இருந்த சேவகர்கள் அவர்களைத் தனியே செல்லலாகாது என்று

தடுத்தனர். அதற்கு அவர்கள், "எங்களுக்கும் தடை உளதோ?" என்றனர். "ஆம். உங்கள் இடையில் காவி உடை உள்ளதே" என்றனர். உடனே அவர்கள் தம் நோக்கத்துக்குத் தடையாய் இருந்த காவி உடையைக் கழற்றி வைத்து விட்டுத் திகம்பரராய் அருணகிரியை அடைந்தனர். ஈசானிய சுவாமிகள் மடத்திலும், மலையிலும், மலைக் காட்டிலும் ஆகப் பலநாள் அவர்கள் தனித்தும் சேர்ந்தும் வசித்தனர். பிறகு திருப்பதி, திருக்காளத்தி முதலிய தலங்கட்குச் சென்று இறைவழிபாடு செய்தனர். காய், கனி, கிழங்குகளை உண்டு பசியாறினர். பல நாள் கழித்து மீண்டும் தில்லையை அடைந்தனர்.

**மீண்டும் சிதம்பர வாசம்;** மீண்டும் சிதம்பரம் வந்துற்ற ஸ்ரீ ஸ்வாமிகள் இருவரும் நடராச தரிசனத்தில் ஈடுபட்டனர். அப்பொழுது **யாழ்ப்பாண நல்லூர் ஆறுமுக நாவலர்** என்னும் புகழ்பெற்ற சிவனடியார் அங்கு வந்திருந்தார். அவர் சுவாமிகளின் திறமறிந்து, மெய்ம்மறந்து வியந்து. அவர்களைப் பின் தொடர்ந்து சென்று வணங்கினர். துறவாண்டவர் அவரை "யார்?" என்று வினவ, அதற்கு அவர் தன் பெயரையும், நடராசரை வழிபட வந்த தன்மையையும் பற்றிக் கூறினர். அவருக்கு, ஸ்வாமிகள் அருள் பாலித்து, அவரது நற்குண நல்லொழுக்கத்துக்கு வியந்து, வாழ்த்தினர். "நாடோறும் பகல் 15 நாழிகைக்கு மேல் கந்தபுராணச் சொற்பொழிவு செய்யுமாறும், பாதிரிகளுக்குப் பாடம் சொல்லுதலை நிறுத்திப் புராணப் பிரசங்கத்தில் ஈடுபாடு மாறும்" ஆணையிட்டனர். அவ்வாறே நாவலர் பணியாற்றினர். அவரது சொற்பொழிவைக் கேட்டுச் சுவாமிகள் பேருவகை உற்றனர்.

**சின்னத் துறவாண்டவர் மறைவு:** தில்லையில் இருவரும் நீண்ட நாள் வசித்தனர். ஒரு நாள் நடராசப் பெருமான் சின்னத் துறவாண்டவரின் முன் காட்சியளித்து, "அவரைக் காசிக்குச் சென்று, கங்கை ஆடி விசுவநாதரை வழிபட" ஆணையிட்டார். அங்ஙனமே அவர் பெரிய துறவாண்டவரிடமும், கோவிலூர் முத்துராமலிங்க ஆண்டவரிடமும்

அறிவித்து, விடைபெற்றுக் காசிக்குச் சென்றார். கங்கை ஆடி, விசுவநாதரை வழிபட்டு, அங்கேயே வசித்து வந்தார் ஒருநாள் அவர் அங்கிருந்த திருவாவடுதுறை மடத்து நமச்சிவாயத் தம்பிரானிடம், “குரோதி ஆண்டு ஆனி மாதம் 31ஆம் தேதி, சுக்கிரவாரம், பத்து நாழிகைக்கு இத்தேகத்து உயிர் மறையும். இதனை எனது குருநாதர் கோவிலூராண்டவருக்குத் தெரிவிக்கவும்” என்று கூறினர். நமச்சிவாயத் தம்பிரானும் அதற்கு இசைந்து, இரண்டு அடியார்களை அவருக்குத் துணையாக அமர்த்தினர். சுவாமிகள் கூறியபடி அவரது உயிர் குறிப்பிட்ட நாளில், குறிப்பிட்ட நேரத்தில் மறைந்தது. உடனே அவரது பூத உடலைக் கல்தொட்டியில் அடக்கம் செய்து, கங்கையில் இறக்கிவிட்டுச் செய்தியைக் கோவிலூர் ஆண்டவருக்குப் பணிவாகக் கடிதத்தின் வாயிலாகத் தெரிவித்தார்.

**கோவிலூரில் வாசம்:** சின்னத் துறவாண்டவர் காசிக்குச் சென்றதும் பெரிய துறவாண்டவர் கோவிலூருக்குத் திரும்பிவந்து ஞானகுருவை வணங்கி, இறையன்பில் ஈடுபட்டார். ஞானகுருவின் ஆணைப்படி ஆப்தம், அங்கம் ஸ்தானம், சத்பாவம் என்னும் நான்கு பணிகளும் செய்து, அடியார்கட்கு அன்னமும் ஆடைகளும் வழங்கி, உபதேசங்கள் புரிந்து, கோவிற் பணிகளும் செய்து‘ ‘என் கடன் பணிசெய்து கிடப்பதே” என்ற நெறியில் ஒழுகினர். அவர் சொல்வன்மையில் ஆதிசேடனையும், கற்பிப்பதில் வசிஷ்டரையும், அறிவில் ஜனகரையும், கருணையில் ஜடபரதரையும் துறவில் சுகப்பிர்மத்தையும்’ பக்தியில் நாரதரையும்ஒத்துக் கொற்றவாளீசர், ஸ்ரீ திருநெல்லை அம்மை அருளால் ஒளிபெற்றுத் திகழ்ந்தார்.

பின் கைவல்ய நவநீதத்திற்குப் பதசாரம் என்ற உரை இயற்றினர். இந்நூலுக்குப் பதின்மர் உரை எழுதியுள்ளனர், அவற்றில் எல்லாம் இவரது உரையே முதன்மையானது. உலகநாத சுவாமிகளைக்கொண்டு “சமிவன க்ஷேத்திர மான்மியம்” “விவேக சூடாமணி”

''ஜீவன் முக்தி விவேகம்'' ''சூதசம்ஹிதை முக்தி கண்டம்'' ''சூதகீதை'' ''ரிபுகீதை'' முதலிய சாஸ்திரங்களைத் தமிழில் மொழிபெயர்க்கச் செய்தார்.

கோவிலூர் ஆதீனத்தின் முதல்வராகிய ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஆண்டவர் தம் இறுதி நாளில், ஸ்ரீலஸ்ரீ துறவாண்டவரை நோக்கி, ''அருணசலம், நீ இன்று முதல் இம் மடாலயத்திலிருந்து அடியார்களுக்கு அருள்புரிந்து வருவாயாக'' என்றார். கலி 4948 சாலிவாகன சகாப்தம் 1769 பிலவங்க ஆண்டு உத்தராயணம் பங்குனித் திங்கள் 8 ஆம் நாள் ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஆண்டவர் சிவபதம் எய்தினர். அன்னார் மறைவுக்குப்பின் கி. பி. 1847 இல் ஸ்ரீலஸ்ரீ துறவாண்டவர் தமது 32½ வயதில் கலி 4948க்குப் பிலவங்க ஆண்டு பங்குனித் திங்கள் 8ஆம் நாள் ஞாயிற்றுக் கிழமை கோவிலூர் ஆதீனத்தின் இரண்டாவது மடாதிபதி என்ற புகழுக்கு உரியவரானார். பலசாதனைகள் நிகழ்த்தலானார். கோவிலூர் மடத்திற்கு வந்து வேதாந்த நூல்களை ஓதி உணரும் அடியவர்களின் உணவு முதலிய வசதிகளின் பொருட்டுக் களத்தூர் என்னும் கிராமம் ஒன்றை மடத்துக்குத் தேடிவைத்தார். நித்தியானந்த ஸ்வாமிகள், சுப்பராய ஸ்வாமிகள் முதலிய பலர் ஸ்வாமிகளைக் குருவாக அடைந்து அருளுரை பெற்றனர். இவர்களுள் நித்தியானந்த ஸ்வாமிகள் வடமொழி தென்மொழிகளில் வல்லுநராய்ப் பஞ்சதசி முதலிய நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்தார்.

மறைவு: ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஆண்டவர் மறைந்து பதினேழாவது மாதம் கலியுகம் 4950, சாலிவாகன சகாப்தம் 1771, (கி. பி 1849) சௌமிய ஆண்டு தட்சிணாயனம் கிரீஷ்மருது ஆடிமாதம் சுக்கிலபட்சம் பானுவாரம் சதுர்த்தசி திதி பூர நட்சத்திரம் மிதுன லக்கினம் என்னும் இவைகள் கூடிய நன்னாளில் ஸ்ரீலஸ்ரீ துறவாண்டவர் சிவபதவி அடைந்தார். உடனே கருணாநிதி அவர்கள் பெரியோர்களையும் அடியார்களையும் வரவழைத்து, மண்டலாபிஷேகம் முதலியவற்றைச் சிறப்பாய் நடத்தினர்.

கோவிலூர் மடத்தில் ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஆண்டவர் லிங்க வடிவமாயும், ஸ்ரீலஸ்ரீ துறவாண்டவர் நந்தி வடிவ மாயும் வீற்றிருக்கின்றனர்.

ஸ்ரீலஸ்ரீ துறவாண்டவர் மீது மதுரைச் சுப்பராய ஸ்வாமிகள் என்பவரால் ஸ்ரீலஸ்ரீ அருணாசல ஞானதேசிக ரத்னப்பிள்ளைத் தமிழ்'' சொற்சுவை, பொருட்சுவை நிறையப் பாடப்பெற்று வெளியிடப் பெற்றுள்ளது.

ஸ்ரீலஸ்ரீ துறவாண்டவர் மறைந்த பொழுது கருணாநிதி அவர்கள் பாடியபாடல் வருமாறு

அரியகலியுக வருட நாலாயிரத்துத் தொளாயிரத்து
ஐம்பதின் மேல்
அஞ்சலி வாகன சகாப்தம் ஓராயிரம் அடுத்த
எழுநூற் றெழுபதொன்
றுன சவுமிய வருடமொடு தக்கணாயனம் அளப்பருங்
கிரீஷ்மருதுவும்
அங்கடக மதி தேதி ஒன்பதொடு சுக்ல பட்சாதி
வாரத்தினிரவில்

தரும் அமிர்த கடிகை இருபத்தினற்பூர
நட்சத்திரம் திதி சதுர்த்தி
தனில் மிதுன லக்கினமதொடு வரியானுடன்
சார்வணி சவாகரணமும்
சாற்றும் இவைசேர் சுபதினத்தினின் மணிக்கரைத்
தண்கடல் தூசுடுத்த
தரைமகட்கொரு தரளமாலை புரைமது நதித்
தனிநடும தாணியென்ன
மருவிவளர் தென்கழனி யம்பதியின் நாப்பண் ஒளிர்
மாணிக்கமென விளங்கும்
வர முத்து ராம குரு லிங்கத்தில் எந்நாளும் மன்னும்
ஒளியாய்க் கலந்தான்

மகிமை தரு ரகுபதிக் கருள் இருடி புங்கவ வசிட்டர்
போதக சத்தியும்
மலர் பணுட வியு ரகனேந்தும் ஒரு பூச் சக்கரவர்த்தி
சனகன் ஞானமும்
வரையரிய சடபரதர் சிவகாருண்யமும் மன்னு
சுகர் சந்நியாசமும்
வான்பரவு நாரத மகா முனிவரேந்திரன்
மனதிலுறு சிவபக்தியும்
வாரித் திரட்டி ஓர் உருவு கொடு வந்தென்னை
வழி முறைமை அடிமை கொண்ட
மாசிலருணு சல சதாசிவ சுகோதய மகா குரு
சிகாமணியரோ!

**மூன்ருவது பட்டம்:** ஸ்ரீலஸ்ரீ துறவாண்டவர் மறைவுக் குப் பின்னர் மூன்ருவது மடாதிபதி என்னும் பேறு பெற்றவர் ஸ்ரீலஸ்ரீ. கருணுநிதி ஸ்வாமிகள் ஆவார். அன்னர் ஸ்ரீலஸ்ரீ துறவாண்டவர் அவர்களின் உடன்பிறந்த தம்பி யாவார். அவர் ஒரு முறை கோவிலூருக்கு ஸ்ரீலஸ்ரீ துறவாண்டவ ஸ்வாமிகளைக் காணச் செல்ல விரும்பினர். உடனே தன் தாயிடம் சென்று அதற்கு அனுமதி கேட்டார். அதற்கு அவர்கள், "கோவிலூருக்குச் சென்ற எருமை மாடு கூடத் திரும்பாதே. நீ எங்கே திரும்பப் போகிருய்?" என்ருர்களாம். தவருது திரும்பி வருவதாகக் கூறிவிட்டுக் கோவிலூருக்குச் சென்ற கருணுநிதி பிறகு திரும்பவில்லை. கோவிலூரில் அவர் ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஆண்ட வரைச் சரணடைந்து அருள் பெற்ருர். சிலநாள் கோவி லூரில் தங்கியிருந்து பின் திருப்பெருந்துறைக்குச் சென்று வடக்கு மடத்தில் தியான சமாதிகளைச் செய்து கொண்டிருந்தார். இதனைக் கேட்டதும் ஸ்ரீலஸ்ரீ துறவாண் டவர் குறுந்திரட்டு, பெருந்திரட்டு முதலிய சாஸ்திரங் களினின்றும் ஐம்பது செய்யுள் எடுத்துத் திரட்டிச் "**பீடா சாரம்**" எனப் பெயரிட்டு, ஒரு கடிதமும் எழுதித் திருப்பெருந்துறைக்கு அனுப்பினர். அதனைக் கண்ட

கருணாநிதி மனம் நெகிழ்ந்து, உடனே புறப்பட்டுக் கோவிலூருக்கு வந்து ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஆண்டவருக்கு அடியார்க் கடியாராய் நடந்து வந்தார். பிறகு ஸ்ரீ ஆண்டவர் விருப்பப்படியும், துறவாண்டவர் ஆணைப் படியும் மூன்ருவது மடாதிபதி ஆனார். ஆண்டவரை மகாலிங்க மூர்த்தியாகவும், துறவாண்டவரை நந்திகேசுவரராகவும் சமாதியிடத்தில் அமைத்து, இருவருக்கும் ஒன்ருய்க் கர்ப்பக்கிரகம் முதலியன அமைத்துக் கும்பாபிஷேகம் முதலியன செய்து நித்திய பூஜைகளுக்கு ஆவன செய்தார். அன்னுரைத் தொடர்ந்து கோவிலூர் ஆதீனத்தின் அருட்பணி சிறப்பாக வளர்ந்து வந்துள்ளது. இன்றுள்ள ஆதீனகர்த்தர் எட்டாவது பட்டமாவார்.

பட்டவரிசை

| | | |
|---|---|---|
| முதலாவது பட்டம் | | கோவிலூர் ஸ்ரீலஸ்ரீ ஆண்டவர் என வழங்கும் ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஞான தேசிக ஸ்சுவாமிகள் |
| 2 வது | ,, | கோவிலூர் ஸ்ரீலஸ்ரீ துறவாண்டவர் எனவழங்கும் ஸ்ரீலஸ்ரீ அருணுசல ஞான தேசிக ஸ்வாமிகள் |
| 3 வது | ,, | கோவிலூர் ஸ்ரீலஸ்ரீ கருணாநிதி என வழங்கும் ஸ்ரீலஸ்ரீ சிதம்பர ஞான தேசிக ஸ்வாமிகள் |
| 4 வது | ,, | ஸ்ரீலஸ்ரீ இராமசாமி ஞான தேசிக ஸ்வாமிகள் |
| 5 வது | ,, | ஸ்ரீலஸ்ரீ வீரசேகர ஞான தேசிக ஸ்வாமிகள் |
| 6 வது | ,, | ஸ்ரீலஸ்ரீ அண்ணுமலை ஞான தேசிக ஸ்வாமிகள் |
| 7 வது | ,, | ஸ்ரீலஸ்ரீ மகாதேவ ஞான தேசிக ஸ்வாமிகள் |
| 8 வது | ,, | ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஞான தேசிக ஸ்வாமிகள் |

கோவிலூர் ஆதீனத்தின் பணி மென் மேலும் சிறந்து மக்கட்கு அருள் நெறி காட்டி ஞானஒளி பரவிவிளங்குக.

## ஸ்ரீலஸ்ரீ துறவு ஆண்டவர் துதி

சொர்ணநாதபுரம் பழநியப்பய்யா அவர்களால்
இயற்றப் பெற்றவை.

இன்பம் அளிக்கும்அடி; என்வினையை நீக்கும்அடி
துன்பங்கள் எல்லாம் தொலைக்கும்அடி—அன்பார்
கருணா கரனும் கழனிநகர் வாழும்
அருணா சலன்சே வடி. 1

செங்கமல மலர்போன்ற முகம்தான் எங்கே?
சிறியனைவா என்றழைத்த திருவாய் எங்கே?
அங்கமெலாம் நீறணியும் அழக தெங்கே?
அரியவெண்கோ வணம்கட்டும் அரைதான் எங்கே?
சங்கையறப் பொருள்ஓதும் சமர்த்தும் எங்கே?
தாயினிலும் மிகச்சிறந்த தயைதான் எங்கே?
மங்கையரை மிகப்பழிக்கும் கவிதான் எங்கே?
வளவருணா சலமுன்போல் வந்தாள் வாயே! 2

## ஸ்ரீலஸ்ரீ துறவு ஆண்டவர் வாழ்த்து

திருவாவடுதுறை ஆதீன மகா வித்துவான்
திரு. மீனாட்சிசுந்தரம்பிள்ளை அவர்களால்இயற்றப்பெற்றது

துறவொழுக்கம் அனைத்தும்ஒரு வடிவுகொண்டால் அன்ன
தூயவன்தன் மயமாக யாவையும்கண் டிருப்போன்
மறவொழுக்கம் கடிந்துயிர்கள் சுவானுபவ மருவ
வயங்கியவே தாந்தசிர வணமேற்றும் வலியோன்
அறவொழுக்கம் தலையெடுப்பக் காரணம்கண் டுவப்போன்
அடங்கும்இடம் ஆகியசி தாகாசப் பிரியன்
உறவொழுக்கம் வளர்த்தஅரு ணாசலதே சிகன்என்று
உரைத்திடுநந் தீசன்எனும் ஒருவனைவாழ்த் திடுவாம்

**ஸ்ரீலஸ்ரீ துறவு ஸ்வாமிகள் பேரில் துதி வெண்பா**

காரைக்குடி (ஆற்காட்டார் வீடு) கு. மெய்யப்ப செட்டியார் இயற்றியது.

ஆண்டவனின் மெய்யடியார் ஆன்ற துறவடியார்
ஈண்டெம்மை ஈடேற்றும் எம்மிறைவர்—மீண்டும்
பிறவா நெறியருளும் பெம்மானின் பாதம்
மறவாமை மாசற்றுர் கோள். 1

வேறு

கற்ருய்ந்த பெரியோர்கள் அருள்வழியைக் கடைப்பிடித்து
கதிசேர் ஞான
முற்றுன முத்திராமன் மனமுவந்து போற்றினர்க்கு
முதற்பே ருகும்
வற்ருத அன்புமொழி வள்ளல்துற வாண்டரை
வழுத்தி னேர்கள்
பெற்ருள்வர் சிதம்பரத்தின் பெருமையினை நற்கதியைப்
பெறுவர் தாமே. 2

வேறு

வளப்பல அடைய வேண்டில் வாணிபந் தழைய வேண்டில்
தலம்பெறு துறவு சுவாமி தாண்மலர் பணிந்துபோற்ற
நிலம் பதினு றுக்கப்பால் நின்மலமாகி ஞானத்
தலம்பெறு முத்தி வேண்டிற் ருழிணை மறவாய்நெஞ்சே 3

தலம்பல. சுற்றிலென் தாலம் புக்கிலென்
நலம் அரு ணுசல ஞானி பாதத்தை
வலம் வரு மன்பர்க்கு வளரு ஞானமே
இலகிடு மார்க்கமு மெளியதாகுமே 4

கண்ணினுண் மணியே சாமி
கருணையாம் துறவு சாமி
தண்மை சேர் மடத்தில் ஞானத்
தலைமையாய்ப் பீடம் ஏற்றே
உண்மையாம் ஞான போதம்
உரைத்தநு பூதி நல்கும்
விண்மணி விமலன் ஞானி
விரைகழல் போற்றி போற்றி. 5

சிவமயம்

ஸ்ரீலஸ்ரீ துறவாண்டவர் என வழங்கும் கோவிலூர்

**ஸ்ரீ அருணாசல ஞான தேசிக ஸ்வாமிகள்**

# தோத்திரப் பதிகம்

இயற்றியவர்; திரு. கோபால் அய்யா (கோவிலூர் மடம்)

**கணபதி வணக்கம்**

பேரின்பங் காணப் பெறுதுறவே மார்க்கமெனச்
சீரொடு நித்த துறவிறைக்குப்—பாரெங்கும்
போற்று கணேசனைப் போற்றிச்செய் வன்பாக்கள்
ஏற்றமிலா தாமோ இயம்பு.

கிரேதா யுகத்திற் கபிலரும் பின்னர்
திரேதயுகத் தத்தாத் திரேயர்—ஓரேநோக்காய்
நல்வியாசர் மூன்றுனே நின்றுசங்க ராசானே
வல்கலி யிற்குருவாய் வந்து 1

அனாதியாம் வேதாந்த வர்த்தம் விளக்கி
தனாதியினை சைவிடுத்துத் தங்கி—கனாப்போலே
கண்டெங்கு மொன்றாய்க் களித்திருத் தல்தானென்
றண்டமெங்குஞ் சொன்னா ரவர் 2

அவர்சொன்ன தன்மையா யன்போ டிருந்து
தவநெறியிற் றங்கிய தாதா—உவரிப்பின்
முத்திராம லிங்க முனிவர்க்குச் சீடனாம்
அத்தனரு ணாசல னார் 3

நெல்லையம் பாளருள் நேரே யடைமுத்தன்
சொல்லைக்கொண் டின்பாய்த் துறந்துநின்—றெல்லையில்
இன்ப மடைதுற வேசனரு ணாசலர்க்கு
மன்புகழு ரைப்பாம் மதித்து, 4

இறையனு ரீந்த இனியதாம் பொங்கல்
குறைவற வுண்டீர்வெண் காட்டில்—மறைகாணு
ஆதிசைவர் வேடத்தில் ஆண்டவனைக் கண்டவுயர்
பூதியென்ன சொல்வேன் புனைந்து. 5

தவம்புரியச் செல்காலச் சேவகர்கள் சாற்ற
அவமெனப் போக்கினீ ராடை—பவமற்ற
நற்றிகம்ப ரத்தை நயந்தி ரருணையில்
உற்றபெரு மைவேறுண் டோ. 6

பலமலர்த் தேன்போற் பலநூற்பா சேர்த்து
நலமொடு தம்பிக்கு நல்கி—சலசலப்பை
போக்குசீ டாசாரப் பொன்னூலா லெங்கட்கும்
ஏக்கமிலா தாக்கினீ ரீண்டு. 7

மது நதி பாயுமா வன்னிவனஞ் சூழ்ந்த
பொதுமட வாசியாம் புண்ய—மதுப்போலே
பாடம் நடத்திப் பலசீடர்க் குக்குருவாய்
மூடமிலா முத்தரா னீர். 8

நல்வேதாந் தம்பரவு நம் கோவி லூர்மடத்தின்
வல்லிரண்டாம் பட்டம் வகித்தீஇர்—பல்லோர்
வணங்கத்தே கம்நீத்து மாநந்தி யானீர்
இணங்கிய நின்றனக் கின்று. 9

நாலுமுப்ப தாண்டுபூசை நற்சௌமி யத்தாடி
ஏலுபூர வோரை யியைந்ததால்—சாலுமென்ன
வாழ்த்தியெந் நாளும் வணங்கியே நாமெல்லாம்
வாழ்த்தும் பணியாற்று வாம். 10

## துறவு ஆண்டவர் சோடசப் பாமாலை

இயற்றியவர்: திரு. சு. அ. இராமசாமிப்புலவர்; கருப்பக்கிளர்

### காப்பு

நேரிசை வெண்பா

சீராருங் கோயிலூர்ச் செய்ய திருப்பதியில்
பேராருந் தேசிகனும் பெற்றியுடன் - ஏரார்
அருணு சலத்துறவு ஆண்டவரைப் போற்றக்
கருணு கரக்கரியே காப்பு.

### நூல்

எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

திருவளர் பாண்டித் தேவிநற் கோட்டை
  செய்தவப் பயனென வந்து
பெருவள ஞானம் பெற்றுவீ டடைவான்
  பேசருந் துறவு மேற் கொண்டு
உருவளர் ஞான வாரிதி யாகி
  ஓங்கிய ஒருவனே பணிந்தேன்
கருவளர் பிறப்பில் அடியனேன் வீழாக்
  கதியெனக் கருள்புரி வாயே.




சீர்திகழ் கோவி லூர்தனின் மேவிச்
  செப்பருந் துறவுமேற் கொண்டு
ஏர்திகழ் ஞானம் நிறைதவ ஞகி
  இயங்கிய பெரியவ நினது
தார்திகழ் அடிகள் தலைமிசைக் கொண்டேன்
  தாங்களும் பிறவிநோய் தவிர்த்துப்
பேர் திகழ் வீடு பேற்றினை அடியேன்
  பெற்றிட அருள்புரி வாயே. 2

கோவிலூர் மேவுங் குருபர னுகிக்
கோதிலா ஞானத்தை அடியார்
மேவிட அருள்செய் மெய்த்தவ னென்ன
விளங்கிய முத்துரா மேசன்
தாவினற் ருளைத் தலையுறப் பணிந்து
தத்துவ ஞானத்தைப் பெற்ற
ஓவிலாத் துறவோய் நின்னடி பணிந்தேன்
ஒன்றினைத் தந்தருள் வாயே. 3

யானென தென்னுஞ் செருக்கினை யறுத்தான்
யாவரும் புகழ்ந்திட உலகில்
வானென விளங்கும் பதத்தினில் உள்ளார்
வளர்பத விக்குமே லான
மோனவீ டடைவான் எனத்தமிழ் மறைதான்
மொழிந்தசொல் லாங்குறள் தனக்கு
ஈனமி லெடுத்துக் காட்டெனுந் துறவோய்!
எந்தையே அருள்புரி வாயே. 4

மறையின தந்தப் பொருளினை யடியார்
மனங்கொளப் புகன்றுமே லான
துறைதனை யடையத் தூயநல் லமுதச்
சொன்மழை புரிந்தமெய்த் துறவோய்
தறைதனிற் பிறந்து மயல்தனிற் கிடந்து
சாவதே தொழிலென வமைந்த
கறையினேன் தனக்குன் கழன்மலர் தந்து
காட்டுவாய் வீட்டினை மன்னே. 5

ஓதிடு மிந்த உலகத்துப் பொருளாய்
உற்றவை பற்பல வதனுள்
யாதுயா ததனில் ஒருவியே நின்று
யதார்த்தநல் லறிவினைப் பெற்றுப்
போதனு யிலங்கித் துறவியா மவன்றான்
புகலுமப் பொருள்களால் உண்டாம்
நோதலை விட்டான் என்றதற் கெடுத்துக்
காட்டெனும் நோன்பினேய் அருளே. 6

பிறப்பெனப் புகலும் பேதைமை நீங்கப்
பெருமையாய் அறிஞர்கள் பேசும்
சிறப்பெனும் அந்தச் செம்பொருள் தன்னைச்
சிந்தையில் உள்ளவா தெளிந்து
இறப்பெனும் அதுவும் பிறப்பெனும் அதுவும்
ஏகிடச் செய்தரு ளீதான்
உறப்பெறற் குரிய ஒப்பில்வீ டருள்வாய்
ஓங்குமா துறவினை யாண்டோய். 7

சீர்திகழ் வெண்கா டதனின்மே விறைவன்
சேர்ந்தநின் பசிப்பிணி தீர்ப்பான்
ஏர்திகழ் பூசை இயற்றுவோர் வடிவாய்
எய்தியே உணவினை நல்குன்
பேர்திகழ் அரிய பெருமைதான் அடியேன்
பேசவுங் கூடுமோ துறவோய்
நார்திகழ் இந்த உலகினிற் பிறவா
நற்பதந் தந்துநீ யருளே. 8

நீடரும் பதத்தை நீளுல கதனில்
நின்றுமே காட்டிடுங் குரவன்
தேடரும் பதத்தைப் போற்றுத லெவ்வா
றென்னவே தேர்ந்துதான் ஒழுகச்
சீடர்கள் ஆசா ரத்தினைத் திரட்டிச்
சீர்பெறு நூலெனச் செய்தோய்
மூடம தகற்றி மோட்சத்தை அளிப்பாய்
மொழிபெருந் துறவினே யெற்கே. 9

வீட்டினை நாடும் மேலவர் தாமவ்
வீட்டினைப் பெற்றுமே மகிழ
வீட்டினை விட்டுன் விரைமலர்த் தாளை
விழைந்துமே வந்துதான் கூடின்
வீட்டியஞ் ஞான மயலின்வே ரறுத்து
வேறும்ஒன் றில்லெனக் கூறி
நாட்டியே வீட்டை நல்கிடுந் துறவோய்
நானுன தடைக்கல மருளே. 10

நான்மறை முடிவில் நவின்றிடும் பொருளை
நண்ணிய சீடர்கள் தமக்கு
மேன்முறை தெரிந்து வீட்டினை மேவ
விளக்கிடும் பெரியநற் றுறவோய்
கான்மலர் போற்றிக் கவின்பெறு பதத்தைக்
கடையனேன் பெற்றிட வருள்வாய்
நூன்முறை தெரிந்து மற்றவர்க் கதனை
நுவன்றருள் புரிந்திடுந் தேவே- 11

காமமே வெகுளி மயக்கமே என்னக்
கழறிட நின்றிடு மூன்றின்
சேமமே பிறவி வித்தெனத் தெளிந்து
சேர்ந்திடா தவைகளை வெறுத்து
ஏமமார் பதவி எய்திய நினது
எழில்நிலை எனக்குமே எய்தத்
தாமமார் துறவாய் தோளினை யருள்வாய்
தஞ்சநீ யன்றிவே றிலையே 12

பார்த்தனுக் கருளும் பரமனுர் திருவாய்
பகர்ந்திடு கீதையே முதலாம்
ஆர்த்திசேர் நூல்கள் அனைத்தையும் உணர்ந்தே
அவைகளைப் பக்குவர்க் கருளிக்
கீர்த்திசேர் வீடு பேற்றினைக் காட்டும்
கேடிலாத் துறவினேய் நினது
வார்த்தையாற் பலபேர் வாங்கிய வீட்டை
மாதவ எனக்குமீந் தருளே. 13

சங்கர குரவன் தன்மர பிந்தத்
தரணியில் தழைத்துமே நீட
இங்கருள் பெரியார் தம்மிலே இயைந்து
ஏற்றவா பணிதனைப் புரிந்து
பொங்கிய புகழ்சேர் கோவிலூர் தன்னில்
போற்றவே நின்றருள் துறவோய்
பங்கமில் குரவ பதமலர் தந்தென்
பவப்பிணி நீங்குமா றருளே 14

சத்துவ மாந்தர் பரகதி பெறுவர்
என்னவே சாற்றுரை கொண்டே
இத்தரை தன்னில் சத்துவ குணமே
இயைந்திட இலங்கிய துறவோய்
மெய்த்தவப் பயனல் மேவிடும் அரிய
வீட்டையும் விறலுடன் பெற்ருய்
முத்தனு மாறென் தீவினை யெல்லாம்
மோகமோ டேகுமா றருளே. 15

இறந்துபோ மளவும் இந்தநல் உலகில்
இழிந்திடு பொருளையே தேடிச்
சிறந்தபோ கங்கள் தம்மையே நாடித்
திரிதரு கின்றனன் அடியேன்
மறந்துமோர் நல்ல வினைதனைப் புரியா
மதியினேன் தனக்கும்நீ அருள்வாய்
துறந்தவர் தம்மில் உயர்ந்துநல் லுலகில்
துறவினை ஆண்டதே சிகனே. 16

—::—

உ
சிவமயம்

கோவிலூர் ஆதீனம் இரண்டாவது பட்டம்
ஸ்ரீலஸ்ரீ அருணசல ஞான தேசிக ஸ்வாமிகள் என வழங்கும்
ஸ்ரீலஸ்ரீ துறவுஆண்டவர்மீது மதுரை சுப்பராய
ஸ்வாமிகள் அவர்களால் பாடப்பெற்ற

## திரு. அருணசல தேசிக ரத்தினப்

# பிள்ளைத் தமிழ்.

**விக்நேசுவர துதி.**

சீர்மேவு நால்வேத முடியினுப நிடதமுஞ்
    செவ்வாய்ம லர்ந்துரைக்குஞ்.
சித்தார்த்த போதமாஞ் சிற்சதா நந்தசிவ
    செம்பொருளு முடலின்மேலா,
யேர்மேவு சீவனு மபேதவடி வாகலா
    னேகமே வாத்துவிதமென்.
றியாவரு முணர்ந்திடற் கங்கைகொ டுணர்த்துமத
    யானைமுக னைத்தொழுதுமால்.
கார்மேவு மஞ்ஞான இருள்சீத்தெ ழுந்ததிவ
    கரமணி சுதாதீதமாங்.
கைவல்ய முதவுசிந் தாமணிநல் வானவர்சி
    காமணி விளங்குஞானத்,
தார்மாம றைப்புமான் சீவரத் தினமணி
    சதாசுகக் கண்மணியருந்,
தமர்கள்சூ டாமணியெ னரியசற் குருமணித்
    தமிழ்மொழித ழைக்கவென்றே.

## 1. காப்புப் பருவம்.

### விஷ்ணு ஸ்துதி.

சுகுணகிரி யானந்த வர நதிந றுந்தமிழ்த்
தொங்கல்பர போதமதமா,
துங்கமன வாம்பரிவி தேகவள நாடுசிற்
சுகநகர ருட்கேதனங்,
குகுண நம நாதியர்க ளஞ்சுறந டாத்துசெங்
கோன்மறைமு ழக்குமுரசங்,
கோதறுத சாங்கமாக் கொண்டஅரு ளூசலக்
குரிசிலைக் காத்தருள்கவே,
யகுணநெடு மாயவெங் கோடையால் வாடுமுயி
ராம்பயிர்த ழைப்பநினைவோ,
டயர்வெனுந் திரையில்பரி புரணகெம் பீரமா
யாழ்பரங் கடல்குடித்துத்,
திகழ்மோட்ச லட்சுமியெ னுஞ்சோதி மின்னலொளி
செய்யவருள் வெற்பிவர்ந்து,
சிவஞான அமிழ்தமழை கைம்மாறி லாதுபொழி
செங்கட்க ருங்கொண்டலே. (1)

### சதாசிவ ஸ்துதி.

சிவஞான வடிவமுண் டாக்கியரு ளாஞ்சுவைத்
தென்னமுத மூட்டிவன்கட்,
சீவபோ தத்தைக்கு மைத்துஞா தாதியைத்
திகழாம லாவரித்தே,
யுவமானமற்றபோ தானந்த வெள்ளமே
யொருதாமெ னத்தெருட்டு,
மோங்குதிரு விளையாட லடியரித யாம்பரத்
துறுகடவு ளைத்துதிப்பாம்,
நவமான நறவொழுகு குமுதமென வண்கைமலர்
நாளுமுகு ளிதமாகவு,

நளினமென வேயெளிய னகமலர வுஞ்செயிள
ஞாயிறென வேநிறைந்த,
பவமான இருள்பருகி அரியமெய்ப் பத்தியாம்
பரவையின் முகட்டு தித்துப்,
பரமசுக லீலைபுரிஅருண சலப்பெயர்கொள்
பான்மகவ ளிக்கவென்றே (2)

சிவகாமி ஸ்துதி — வேறு.

பூநத மாமறை நூபுர மோலிடு பாதபு ராதனனைப்-
பூரண ஊச்சக காரண னச்சுக போதம தானவனைத்,
தீனத யாநிதி யாகவி ளங்கிய தெய்வசி காமணியைச்-
சீரரு ணசல ஞானவ ரோதய சேயினை யருள்புரிக.
மானத முன்றனு வாகிய முப்புர மாளுற மெய்யுணர்வாம்-
வன்னிவி டுத்தொரு புன்னகை கொண்டுறை வானவ
[னேர்புடையிற்,
பானுவி னெண்கதிர் மானவி ருந்தருள் பாலித மேபுரியும்-
பானல்வி ழிச்சிவ காம சௌந்தர பச்சையி ளங்கிளியே. (3)

விநாயகர் ஸ்துதி — வேறு

பெருமா மதியென அகமே வளர்தரு பிள்ளைப் பெரு
[மானைக்,
குருமா மணியெனு மருண சலவெங் கோவைக் காவல்
[செயும்,
வருமா லுலகுயர் சிவமே யெனவலம் வந்தோர் கனிவாங்
[கும்,
திருமூ லப்பிர ணவமந் த்ரார்த்த தேஜோ மயவடிவே. (4)

சுப்பிரமணியர் ஸ்துதி — வேறு.

பனிமால் வரைமிசை யுத்பவ மாகிப் பரஞ்சோதி-
படருந் தருவைச் சூழ்தரு பைம்பூங் கொடிதந்த,
கனியா கியமுரு கன்றிருப் பொன்னங் கழற்போதைக்-
கடையே முடிமிசை வைத்திரு கைகூப் புதல்செய்வாஞ்.

செனியா வழிஞா னக்குல தீபங் கனியமிர் தஞ்-
சிறியேங் குடிமுழு தாண்டருள் செய்யுங் குலதெய்வந்,
தனிநா யகமென வேயொரு தானே யருளுருவாய்த்-
தரைமேல் வருகுரு ராயம தலையைப் புரந்திடவே, (5)

விபூதி ஸ்துதி — வேறு.

சுருதி வடிவாள் கொடுவிடயச்
சூழ்கா டெறிந்து வெளியாக்கித்-
துரிய மெனுநல் விதையூன்றித்
தொல்லா ரருணன் னீர்பாய்ச்சிக்-
கருது மொருமெய்ச் சிவபோகங்
கையா டுழவ ருறைதருதென்-
கழனி வாயற் பதிவாழுங்
கருணை லயனைக் காத்திடுமால்-
திருகு சீவப் பழமலத்தைச்
செங்கை வாங்கி மெய்ஞ்ஞானத்-
தீயிற் புகட்ட வதிற்பூத்துத்
திருந்த வருந்திற் பவரோகம்-
பெரிது தணித்து மேலணியிற்
பேதக் குணுங்கு தனையோட்டிப்-
பேரா னந்த சித்திதரும்
பிறங்கு தெய்வத் திருநீறே. (6)

உருத்திராட்ச ஸ்துதி — வேறு.

மன்னுயிர் கட்கடு மின்னலி யற்றுற
வந்துழி யஞ்சுமுக
மற்றவை தம்வயி னுற்றெரி யிற்செறின்
மாறலி லாறுமுக
மின்னவை தத்தமு ளத்துற னல்விதி
யென்னவ ருட்கடலூற்,
றெய்தியி ருந்தருள் பசுபதி விழிவழி
யெழுமணி யைத்தொழுவாந்,
தன்னிகர் மெய்த்தவர் சற்குரு நற்கழ
றண்கம லம்புகுமா,

தவளநி றப்பவ ளச்சர ணம்பொற்
றழைவிரி சிறையன்ன,
முன்னுற வுற்றிருள் வாய்புரி கண்படு
முளரிம லர்ப்பொய்கை,
மொய்த்திடு நற்கழ னிப்பதி தேசிக
முத்தைய ளித்திடவே. (7)

### பஞ்சாக்ஷர ஸ்துதி—வேறு

பவசலதி வரையிவர வந்தநற் பாதையைப்
பழவடிய ரகமருவு செஞ்சுடர்ச் சோதியைத்,
துவளுவத மலையனைய வைம்புலத் தோட்டியைத்-
துரியசிவ னுரியபெய ரைந்தினைப் போற்றுதுங்,
கவனுநினை வயர்வகல மொய்த்ததற் சாட்சியைக்-
கரமணரியி னுதவியெதி ருற்றகட் காட்சியை,
யவனிஎளி முரல்கழனி யம்பதித் தீர்த்தனை
யருணகிரி யெனநிலவு சுந்தரற் காக்கவே. (8)

### பூமகள் ஸ்துதி –வேறு

நாதஞ் சிலம்புஞ் சலஞ்சலமு நல்விந்
தெஃகப் புடையு மெனு
நளினந் தாங்கிக் குரம்பைமுத னுகமெ
னும்பன் னகவணையிற்,
போதஞ் சுருங்கிச் சுகத்துறங்கும் புத்தே
ளிதயப் பூந்தவிசிற்
போந்தின் னருள்வாழ் வுதவுறுநற் பூமா
மகளைப் போற்றுதுமால்,
வேதஞ் சுரும்புக்குழு வெனச்சூழ் விமலா
னந்தக் கனியருந்தி
விண்ணோர் பண்சே யிசைமுரன்று விளையாட்
டயரும் பங்கயப்பூம்.
பாதஞ் சிரத்திற் பொறித்தருளிப் படிறேன்
றனையும் வலிதாளும்,
பரமானந்தச் செல்வனையே பாது
காத்திங் கருள் செயவே. (6)

### நாமகள் ஸ்துதி-வேறு

மூவர் மாமறைகள் சூழ தற்கரிய
மோன ஞானசு விநோதனை
மூடி ராவினிசி கோடி யென்னவரு
மோக பாசவதி நாசனை,
தீவ மிந்திரவி கோடி யென்னஒளிர்
சிற்சு கோதயவி லாசனைச்,
சீர்வி லங்குமரு ஞசு லப்பெ ரிய
தேசி கேசனைய ளிக்குமால்,
வீவி லாதவமு சோக, மென்னுமருள்
வெள்ளை யன்னமிசை யூர்தியாய்
மேவு மிவ்வுலக மாய ழிந்திடவி
ழித்தி மைத்தல்புரி வேதனுர்
நாவெ னுங்கமல பீட மேவிமறை
நாலுமோதியடி யார்கள்பான்
ஞான வித்தையைய ளித்தி லங்குமெனி
னுவிலுற்றகலை வாணியே. (10)

### பலதேவர் ஸ்துதி—வேறு

இமையவர் விஞ்சையர் பைரவ ரிந்திர
ரிரவிகள் சந்திரர்சூ
ழெண்டிசை யோர்வசு வெண்மர்ம ருத்துவ
ரேழ் மறை நன்முனிவ.
ரமுதுற ழின்மொழி யெழுமட மங்கைய
ரங்கம லத்துறையு
—மாதிநல் வேதிய ஞதியர் வந்திவ
ஞரரு ளேபுரிவா,
ரமைதரு பொன்மக ளெழிலுறு வம்புனை
யங்கைதி ருந்தியபி
னம்புய னுயிரொடு வரைதரு மோவிய
மன்னம லர்க்கையார்.

சுமைதரு கொங்கை குலுங்கந டம்புரி
சொர்னம ணிக்கோயிற்
றாயந லூரரு ஞசல தேசிக
சொச்சுக ரூபனையே (11)

## 2. செங்கீரைப் பருவம்

பூமலிய நந்தசிற் சொலிதமட—வன்னமென்
பூண் முலை யெடுத்தணைத்துப்
புனிதவருள் வாசநன் னீர்கொடபி டேகம்
புரிந்துமெய்ஞ் ஞானும்பரத்,
தூமலிபொ லன்றுகில் கொடீரம்பு லர்த்தியத்
துவிதவெண் காப்பணிந்து,
துரியமெனு நன்னிலத் திலகமிட் டாரணச்
சொர்னமணி தீபதட்டா,
லாமலிய நந்தகல் யாணகுண மங்கையர்க
ளாலத்தி யேத்தெடுத்தங்
காறுமுப சாந்தகுண வால்வளையி னுன்முகந்
தனுபவானந் தவெள்ளத்,
தேமலியு மின்னமிர்த ருத்தவள ருங்குழவி
செங்கீரை யாடியருளே
திமிலமறை யறிவரிய சமரசசு வானுபவ
செங்கீரை யாடியருளே. (1)

மகிமைதரு சித்தார்த்த போதமா வாக்கிய
மணித்தொட்டி லிற்பிணித்த
மலர்முண்ட காதியுப நிடதமெனுமாடக
வடந்தடக் கைப்பிடித்துச்,
சுகமொழியு பேட்சையுப சாந்திநல் விசாரணை
சுபேட்சையரு டுய்மைமுன்னுஞ்
சுந்தரப் பாவையர சைத்திடச் சுகபோத
சொரூபனுஞ் சிற் சத்தியு,
மகமகிழ்வு கூர்தரவி வேகனிஷ்க் காமனே
டக்கனவி ரோதநின்று

ளரவிந்த மணிமகுட முடிசூடி யஞ்சலியொ
டாசிபல கூறி நிற்பத்,
திகழ்வால சூரியர்கள் கோடியென வொளிர்குரவ
செங்கீரை யாடியருளே
திமிலமறையறிவரிய சமரசசு வானுபவ
செங்கீரை யாடியருளே. (2)

குருமொழியெ னுஞ்சுடிகை முடியினு டச்சிவணக்
குழைகள் செவியினுடக்
குலமறைப் பொருணரவ மொழுகுமட லவிழ்கடிக்
குமுதவா யிதழ்களாடப்
பொருசருவ சங்கப்ப ரித்யாக மாமணிப்
பொற்றொடிக ளங்கையாடப்,
போதசுக முதவுசெஞ் சீறடியி னுகமப்
புதுநூபு ரங்களாட,
மருவுமிரு வினைகடிண் டாடவக டிதகடித
மாயை நெஞ் சூசலாட-
வண்மைசெறி யடியவர்கள் கொண்டாட வஞ்ஞகுல
மகனுவி சூறையாடத்,
திருவளர் பொழிற் கழனி யம்பதியி லுறைகுரவ
செங்கீரை யாடியருளே-
திமிலமறை யறிவறிய சமரசசு வானுபவ
செங்கீரை யாடி யருளே. (3)

பௌவவெண் டரளமணி மாலைநா லுந்தனப்
பாவையர்க டாளினேவும்—
பணிவிடைகண் முந்தைபுரி பாக்யமென மீக்கொடுஉப்
பாவியர்க ளாழுநிரையங்,
கௌவுவாய் விண்டகன் கரையுமிழி னும்விடாக்
கடும்பவ வளற்றி லாழுங்—
கடையனையு மருவரா தாரருள்க ரந்தெழிற்
கடைநோக்க முட்புறம்புந்,
தௌவலற வைத்தசும் பொழுகுடலி னன்யசை
தன்யவெழி லுருவமாக்கிச்—

சச்சிதா னந்தசுக வெள்ளங்கு டைந்திடத்
தாட்கமல முடிசூடியே,
செவ்விதியி னுண்டநற் றேசிகசி காமணீ
செங்கீரை யாடியருளே-
திவ்யகல் யாணகுண பூஷணவ லங்கார
செங்கீரை யாடியருளே. (4)

வேறு.

தானுவி டத்தே சோரனெ ழுந்தாங் கஞ்சோதித்—
தானுவி டத்தே சீவன மைந்தா னென்றோர்ந்தே,
பூணினி டத்தா ரோபம கன்றுற் பொன்னேயாம்—
போலறி வுற்று லோர்சிவ நீயே யென்றேனே,
காணுத லுற்றே வானவ ருஞ்சூ ழெம்மானே—
காதும தத்தா ரோர்வினி ணங்கா மெய்ஞ்ஞானச்,
சேணுற வுற்றே யார்பவ செங்கோ செங்கீரை—
தேசிக நற்சூ டாமணி செங்கோ செங்கீரை. (5)

வேறு.

இளவா ணகைவார் தனநீ ளறலோ
தியர்மே னசை விட்டே—யிகமே பரமே வருசீ ரெகினங்
காலோ தான மென்றே,
யுளமூ டெழுமா சைகளற் றிகல்சே
ரொருசே வியமுன்னு—
முளமா சகலா மதமா றினுமே
யுளமா நம தற்றே,
யுளதே யிலதே யுருவே யருவே
யொளியே வெளி யேயென்
—றேதும் மவையா யலவா முணர்வே
யொருதா மெனவுய்த்தே,
தெளிவே மிகுவா ரிதயா லயனே
செங்கோ செங்கீரை—
திருவா ரருணு சலநா யகமே
செங்கோ செங் கீரை. (6)

தனமுந் தனுவும் மனமுங் குருவின் சரணந்தனில்வைத்தே-
சரணம் புரியு மதுவே மறைசொற் ருனம் பணியற்றே,
சினமுங் கனமுஞ் சுகமுந் துயருஞ் செறியும் பொழுதெல்
[லாஞ்—
சிவனைந் தொழிலா மெனவுன் னுதலே செயுநற் றவநாளு,
நனவுங் கனவு மயர்வுங் கெடினு நடமற் ருேர்படியாய்—
நணுகுங் கரிநா னெனுமுட்டிடமே ஞானம் மெனவோதித்,
தினமுந் நினைவா ருறவாய் வருவோய் செங்கோ செங்கீரை-
திருவா ரருணு சலநாய கமே செங்கோ செங்கீரை. (7)

சுர நதி யதனைக் கானல்பு னற்கொடு துங்கஞ் செயுமாறுஞ்-
சுடர்விடு பரிதிக் கிருளற வோவிய சுடரெதி ரிடுமாறுஞ்,
சருவரி யிரியக் கார்நிற முகிலைச் சமர்பொர விடுமாறுந்-
தவமுதல் வழிகொண் டெனதுரு வுணரத் தளர்வுறு மமை
[யத்தே,
பருவர லொழியப் பரசுக நிலைசெம் பவளத் திருவாயாற்-
பழமொழி யதுகொண் டொருநொடி யதனிற் பகல்விட
[வருள்செய்தே,
திருமறை முடியின் வளர்தரு குருபர செங்கோ செங்கீரை,
சீரரு ணுசல ஞானவ ரோதய செங்கோ செங்கீரை. (8)

அடியவ ராரிய னருள்வழி யெதிர்பார்த் தமர்தலு மருள்
[பொங்கி-
யவனுரை மொழியுள் ளாமவை யேற்றங் கமைதலும்
[விதியென்றே,
குடவளை சுடர்வான் றுளிவிழு காறுங் குவிவா யங்காந்துங்-
கொழுவிய மீனங் கவர்வான் வெள்ளிய குருகுக ளசை
[வற்று
மடலவிழ் கமலப் பொய்கையு மோடையு மன்னியு ணர்த்
[தலுறு-
மகிமைக ணிறைதேன் கழனியெ னுஞ்சீர் மாநக ருக்கரசே,
செடியருள் வடிவா ளேந்துபு யாசல செங்கோ செங்கீரை—
சீரரு ணுசல ஞானவ ரோதய செங்கோ செங்கீரை. (9)

ஒருமனை யுற்றவ ருதவுவ துய்த்திடி னென்றுறு மய
[லென்றே,
யூர்கடொ றும்பலி கொண்டவ னுண்டுறு மொண்டுற
[வரைமான,
மருவுமி தழ்க்குமு தங்கமு நீரொடு வசனமு தற்கெழுமு,
மலர்தொறும் விரைமக ரந்தம ருந்துற வண்டுகள் புக்கு
[ழவே,
பெருகுந றுந்தே னூறென வோடிப் பேரரு ளிற்பாயப்,
பேரின் பெனவிளை வளர்தரு கழனிப் பேரணி நகர்
[வாழ்வோ,
யருமறை யுச்சியி லாடுப தாம்புய ஆடுக செங்கீரை.
யாரிய னுயெனை யாளுடை நாயக ஆடுக செங்கீரை. (10)

## 3. தாலப் பருவம்

மந்தா நிலப்பைங் குழவிதவழ்
மலயக் குருமா தவமுனிவன்,
மறியுந் தரங்கக் கடல்குடித்து
மருந்தைப்பொருவுந் தமிழ்க்கடலைத்
தந்தாங் கெனது வினைக்கடலுந்
தாகமோகப் பெருங்கடலுந்
தணவாப் பிறவிக் கருங்கடலுந்
தண்ணு ரருட்கண் விருந்தாக்கிச்,
சிந்தா குலத்தைத் தவிர்க்குமின்பத்
தெள்ளா ரமுதக் கடல்விரித்துத்
தீராக் கவலை தீர்க்கவருஞ்
சிந்தா மணியே விரைகமழுஞ்,
சந்தார் பொழிற்றென் கழனிநகர்த்
தலைவா தாலோ தாலேலோ
தவத்தோ ரிதயப் பூந்தவிசிற்
றனிநா யகமே தாலேலோ (1)

மாயத் திருக்கி லதிஷ்டான
வடிவச் சாயை களைப்பொருளா
மதித்தே யுழன்று பினரருளான்
மதிக்குள் விரவிச் சுகிப்பவர்போற்,
றாயத் திரடுண் டொருஞ்சாயை
தோன்ற வதிலொன் றினையிவணந்
தோகை யன்னு ளேகொல்பணைத்
துணைத்தோண் ஞெமுங்கப் புல்லுவமென்,
றேயத் தழீஇப் பயன்காணு
திருப்ப நகைத்துக் கரங்கொட்டி
யிளவா ணகைவந் தாடவர்மார்
பிறுகப்புணர்ந்து விளையாடுஞ்,
சாயப் பளிக்கு மணிமாடக்
கழனி நகரோய் தாலேலோ,
தவத்தோ ரிதயப் பூந்தவிசிற்
றனிநாயகமே தாலேலோ. (2)

வடிவே னயனங் கொடுவுயிரை
வாங்கி நிரயங் குடியேற்று
மகளிர் திறங்க ளுணர்ந்துமவர்
வழிச்சென் மாக்கள் போலாது,
கடிவா ரீசத் துகளருந்திக்
கண்ணீர்கொடுவா யலம்பிவருங்
காலைப் படைஞெண் டெதிர்சென்று
காணு விடினுங் கதைநின்றன்,
னடியார் போலுந் துறவுற்றே
யம்பொற் குறுமுட் டாளலவ
னமருஞ் செந்நெற் றரளம்விளை
யணியார் கழனி நகர்க்கரசே,
தடமாவனது வுளம்பூத்த
சரணும் புயனே தாலேலோ.
தவத்தோரிதயப் பூந்தவிசிற்
றனிநா யகமே தாலேலோ. (3)

சுருதி யூக மனுபவத்தாற்
றுகளற் றெருநஞ் சுயவடி வஞ்—
சுடர்விட் டெறிக்குஞ் சிவமென்றே
தோன்று மள வுஞ் சிறுவருக்கு,
வரையும் யோகர் போற்றும்பி
மது வுண் டயருந் தென்புடைசூழ்—
மயறீ ரிசைகண் முரல்வ னமார்
மாடந் தோறு மடியவரைக்,
கருதி யாகஞ் செயப் புனைந்த
கவினு ரன்ன கொடித்துகில்கள்—
காலிற் புடைக் கக் கற்பகப்பூங்
காவிற் பிலிற்று மதுவெள்ளந்,
தரையுற் றெருதே னுறெனப்பாய்
தருமா நகரோய் தாலோலோ
தவத்தோ ரிதயப் பூந்தவிசிற்
றனிநா யகமே தாலேலோ. 4

தங்கண் மனக்கற் பனை யுலகைத்
தாமே யெனக்கண் டொழியாது—
தவம்பூண் டுழலு மவர்களைநின்
றமர்க ளேக்கி நகைப்பதுபோற்,
பொங்கி யுமிழும் மதக்கை மலை
புகறன் னிழற்கண் டெழிற்படிகப்—
பொருப்பிற் பாயுந் தொறுமுறிந்து
பொருகோட் டுதிர்நித் திலங்கொ ணர்ந்து,
தங்க இழையிற் கோத்தணியுந்
தாம மணிமா ளிகைப்பந்தி—
தயங்குங் குருக்கேத் திரதெய்வத்
தலமாங் கழனித் திருப்பதியிற்'
றங்கி யொளிருந் திருவருண
சலதே சிகனே தாலேலோ—
தவத்தோ ரிதயப் பூந்தவிசிற்
றனிநா யகமே தாலேலோ, (5)

